



உ
கணபதி துணை
திருச்சிற்றம்பலம்

# சைவசாஸ்திர பரிபாலனம்

| தொகுதி உ | விக்கிரம௵ கார்த்திகைமீ 1940 நவெம்பர் | பகுதி ௫ |
| --- | --- | --- |

பிடியத னுருவுமை கொளமிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடு மவரிடர்
கடிகண பதிவர வருளினன் மிகுகொடை
வடிவினர் பயில்வலி வலமுறை யிறையே.

## ஸிம்ஹக்ந மூர்த்தம்

### சிவபெருமான் நரசிங்கத்தோல் அணிந்தது

பொங்குளை யழல்வாய்ப் புகைவிழி யொருதனிச்
சிங்கங் கொன்ற சேவகம் போற்றி. —பதினொராந் திருமுறை.

காசிபமுனிவர் திதி, அதிதி, தனு, அரிட்டை, சுரசை, கடை, சுரபி, விநதை, தாம்பிரை, குரோதவசை, இளை, கத்துரு, முனி என்னும் பதின்மூவரையும் விவாகஞ் செய்தார். அவருள் திதி என்பாள் இரணியன், இரணியாக்கன் என்னும் இருவர் ஆண்மக்களையும், சிம்மிகை என்னும் பெண்ணொருத்தியையும் பெற்றாள். அவருள் இரணியன் என்பான் பிரமாவை நோக்கித் தவமியற்றினான். பிரமதேவர் அவனுக்கு அருள்செய்யும்படி தோன்றி, "உனக்கு யாது வரம் வேண்டும்?" என்று வினவியருளினார். இரணியன் "பங்கயாசன! பஞ்சபூதங்களாலும், ஆயுதங்களாலும், பக்ஷிகளாலும், மிருகங்களாலும், தேவராலும்; மனிதராலும் யான் இறவாதிருக்கவேண்டும்; இரவிலும்

பகலினும் இறவாதிருக்கவும், இறப்பினும் எனது யாக்கையின் குருதி ஓர் துளி பூமியில் விழுந்தாலும் அது என் வடிவெடுத்து என் பகைவரை வேரோடு போக்கும்படியும் அருள் புரியவேண்டும்; ஐய! இவற்றைத் தந்தருளுக" என்று விண்ணப்பித்தான். பிரமதேவர் அவன் கேட்டவற்றைக் கொடுத்து, ஆயுதவகைகளையும் அளித்து மறைந்தருளினர். அளப்பற்ற வலி பெற்ற அசுரேசன் அண்டவாசிகள் அனைவரும் தன்னடி பணியும்படி கட்டளை செய்தான். இந்திரன் முதலாந் தேவர்களும், தேவமகளிர்களும் அவனது குற்றேவலைச் செய்து ஒழுகுவாராயினர். இவனது கொடுங்கோலிடைப்பட்ட சமஸ்தரும் "இரணியாய நம" என்றே இயம்புவார்கள். மறந்தும் மற்றொன்றும் கூறார்கள்.

இரணியன் வைதிக தருமங்களைத் துறந்து, பெரும் பாதகங்கள் முற்றும்படி கொடுங்கோல் செலுத்திவருங் காலத்தில், அவனுக்கு ஓர் புத்திரன் உதித்தான். அவன் பெயர் பிரகலாதனன். அவனுக்கு ஐந்தாண்டாயிற்று. சுக்கிராசாரியர் குமாரர் இருவரிடத்தில் இரணியன் தனது புத்திரனை வில்வித்தை கற்கும்படி அனுப்பினன். ஆசாரிய புத்திரர்கள் அவனுக்கு ஆரம்பத்தில் 'இரணியாய நம' என்று சொல்லிக்கொடுத்தார்கள். அவன் அதனைச் சொல்லாது மறுத்து, 'நமோ நாராயணாய' என்று கூறினன். அவர் இருவரும் எளியவனாகிய இரணியனிடத்தில் இதனை அறிவித்தனர். இரணியன் தனது புத்திரனை அழைத்து, "நீ யாது கூறினை?" என்று கேட்டான். பிரகலாதனன் "நமோ நாராயணாய" என்றான். இரணியாசுரன் வடவாமுகாக்கினி போலக் கோபித்து, ஏவலாளர்களைப் பார்த்து, "வாளை வீசி இவனைக் கொன்றிடுங்கள்" என்று கட்டளையிட்டான். அவனை அவர்கள் வாளால் வெட்டினர். ஆயுதங்கள் முரிந்தன. அதன்பின் விஷமூட்டி அவனைக் கொல்லும்படி பணித்தான். அவ் விஷம் அவனுக்கு அமுதாயது. அதன்பின் நாகங்களைக் கடிக்கும்படி விடுத்தான். பாம்பின் பற்கள் தெறித்தன. பிரகலாதனன் ஒன்றாலும் இறந்திலன் என்பதை இரணியன் அறிந்து, "இவனை நெடிய மலையின் உச்சியிற் கொண்டுசென்று, உறுப்புக்களைக் கட்டிப் பூமியில் தள்ளுங்கள்" என்று கட்டளையிட்டான். அவர்கள் அப்படி உருட்டினார்கள். பிரகலாதனன் இதனாலும் இறந்திலன். அவு

ணன் செய்வதொன்றும் உணர்ந்திலனுய்த் தன் புத்திரனைச் சபை முன்னர்த் தருவித்து தீப்பொறிகால நோக்கி, "என்னை யன்றி உலகத்தைப் படைத்துக் காத்தற்கு உளதெனக் கூறிய கடவுளை என்னெதிரிற் காட்டுதி" என்று வெகுண்டு கூறினன். அப்பொழுது வேதமுணர்ந்த அப் புதல்வன் "அறிவை யூட்டி அனுக்கிரகிக்கும் முதற்பொருளாவது கடவுளே; தேவர் நாயக ரும் திருமகள்நாயகரும் அடியார்மனதிற் குடிகொண்டிருக்கும் காவல் நாயகருமாகிய திருமாலே அக் கடவுள்" என்று கூறினன். இப்படி அவன் கூறியதனை இரணியன் கேட்டலும், "இச் சிறு தூணில் அவனைக் காட்டக்கடவாய்; அங்ஙனம் காட்டாதொழி யின் உன்னைத் தின்பேன்" என்று தீப்பொறி சிந்தக் கோபித் தான்.

அப்பொழுது. அவன் சுட்டிய தூணிலிருந்து திருமால் நரசிங்கமாய்த் தோன்றியருளினர். நரசிங்கம் மாலைப்பொழுதில் இரணியனை மடியிலே கிடத்தி, குடலைப் பிடுங்கி இரத்தத்தைப் பருகியது. அது குருதிநீர் குடித்தமையால் கருவங்கொண்டு, தன் நிலைமை மறந்து உலகத்துள்ள ஜீவராசிகளை வருத்தியது. பிரமனுதியோர் அந்த நரசிங்கத்துக்குப் பயந்து, திருக்கைலாச கிரியை அடைந்து, பரமேசுரனுடைய திருச்சன்னிதானத்தில் நின்று, "ஐயனே! மறைக்குமெட்டாத மெய்யனே! மழுப்படை பரித்த கையனே! தேவரீரைச் சரணமடைந்தனம்; புகலிடம் பிறிதில்லை; விட்டுணுவாகும் நரசிங்கம் செய்யும் குரோதத் தொழிலைத் தாங்கமாட்டோம்" என்று இரந்தார்கள்.

சிவபெருமான் வீரபத்திரக்கடவுளை அழைத்து, "நரசிங்கத் தின் செருக்கை அழித்தி"யென்று கட்டளையிட்டருளினர். வீரபத்திர உருத்திரமூர்த்தி சரபப்பக்ஷியின் பேருருவெடுத்து, அந்த நரசிங்கத்தின் பிடரிற் பாய்ந்து, சகல அவயவங்களையும் குத்தினர். நரசிங்கம் கர்வம் அகன்று உயிரிழந்தது. வீரபத் திரக்கடவுள் நரசிங்கத்தின் தோலை உரித்தெடுத்துச் சிவபெரு மானது திருச்சன்னிதியில் வைத்து வணங்கினர். பிரமா முதலியோர் சிவபெருமானைப் பார்த்து, "எங்கள் நாயக! இதனை ஆடையாகக் கொண்டருள்க" என்று பிரார்த்தித்தனர். சிவ பெருமான் அவ்விதமே சாத்தியருளினர்.

பரமசிவனது பாதகமலங்களுக்கு நரசிங்கமூர்த்தி அருச்சனை செய்தனர். விட்டுணு அந்த அவதாரத்திற் செய்த பாவங்கள் அனைத்தும் தீர்ந்தன.

அப்பர்சுவாமிகள்

துங்கநகத் தாலன்றித் தொலையா வென்றித்
தோத்திறலவ் விரணியனை யாகங் கீண்ட
அங்கனகத் திருமாலு மயனுந் தேடு
மாரழலை யனங்கனுடல் பொடியாய் வீழ்ந்து
மங்காகத் தான்வல்ல மருந்து தன்னை
வண்கயிலை மாமலைமேன் மன்னி நின்ற
செங்கனகத் திரடோளெஞ் செல்வன் றன்னைச்
செங்காட்டங் குடியதனிற் கண்டே னானே.

“எவர் கோரமான சரபவேஷந் தாங்கி உலகத்தை வருத்திய நரசிங்கத்தை ஹிம்சித்தனரோ, பாதங்களால் அரியை அரிக்கின்றவரோ, புருஷரூப விஷ்ணுவை வதம் செய்யாமல் தேவரீரது பராக்கிரமத்தை மாத்திரம் காட்டியருளல் வேண்டுமென்று சர்வ தேவர்களாலும் மகாநிசியில் பின்றொடர்ந்து பிரார்த்திக்கப்பட்டனரோ, கிருபையினால் நரசிங்கத்தின் தோலை நகங்களாற் கிழித்துரித்தெடுத்து, வஸ்திரமாக அணிந்துகொண்டாரோ, மகாபலமுள்ள வீரபத்திரமூர்த்தியாகிய அந்த உருத்திரர் ஒருவரே தியானிக்கற்பாலர்” என்று சரபோபநிடதம் இவ் வற்புதச் செயலைப் புகழுகின்றது.

சிவஞானசித்தியார் பரபக்ஷம் பாஞ்சராத்திரி மறுதலையில் ஸ்ரீ அருணந்திசிவாசாரியரும்,

இங்கடாவளனேமாலென்றிரணியன்றூணையெற்ற
வங்கடாமோதரன்றானுருநரசிங்கமாகி
யெங்கடாபோவதென்னுவுடல்பிளந்திறையானென்ன
வங்கடாசிம்புளாகியெடுத்தடர்த்தானரன்றான்.

என நரசிங்கத்தைச் சங்கரித்தமை கூறியருளினர். “நரஹரி விஜயாத்” (மானுடமடங்கலை வலிதபக் கோறலின்)...“பசுபதிஸ் ஸர்வதேவ ப்ரகிஷ்ட:” என்றதனால் பரமசிவனை அமரர்கள் அனைவர்கட்கும் உயர்ந்தோர் என்று அரதத்தாசாரியர் சிவபரத்துவம் நிலையிட்டருளினர்

நரசிங்கத்தைக் கொல்லும்படி வந்த சரபத்தோடு, அந்த நரசிங்கம் கண்டபேரண்டம் என்ற பக்ஷியின் உருவெடுத்து யுத்தம் செய்து ஜயித்தது என்று புறமதஸ்தர் ஓர் கதை கூறுவர். நரசிங்கத்தைச் சரபம் கொன்றதென்னும் வாக்கியம் சரபோபநிடதத்தில் உளது. விட்டுணு சரபத்தை எதிர்த்தமைக்கு வாக்கியம் நரசிங்கபூருவதாபினி, உத்தரதாபினிகளிற் காணப்படுவது பொருத்தம். அங்ஙனம் காணப்பெறுமையால் அக் கதை புதுவதாய்ப் படைக்கப்பட்ட கற்பனையேயாம்.

ஸிம்ஹக்நமூர்த்தம் சிவபெருமானுடைய அஷ்டாஷ்ட (அறுபத்துநான்கு) லீலாமூர்த்தங்களுள் ஒன்றாகும். சரபமூர்த்தியானவர் சூரியசோமாக்கினி நேத்திரமுடையராயும், அக்கினிச் சிகையுடையராயும், இருபக்கமும் சிறகுகளையுடையராயும், வெளிப்பட்ட பற்களையுடையராயும், எட்டுக் கால்களும் நான்கு கைகளுமுடையராயும், நரசிங்கத்தின் மார்பைப் பிளப்பவராயும் இருப்பர்.

இச் சரித்திரத்தினாலே கடவுளும் புண்ணிய பாபமும் இல்லையென்று நாத்திகம் பேசுவோர் தண்டிக்கப்படுவர் என்பதும், மகாபராக்கிரமசாலியாகிய இரணியனது கொடூரங்களைக் கடக்கும் சக்தி பிரகலாதனனுக்கு வாய்த்தது, சிவனுக்குத் தொழும்புசெய்யும் விட்டுணுவின்மீது வைத்த பக்திமிகுதியினாலேயாம் என்பதும், விட்டுணுவின் தியேயப்பொருளால் விளங்குபவர் பரமசிவனே என்பதும், அகங்காரத்துக்கும் பிராயச்சித்தமாய் முடிவது சிவார்ச்சனையேயாம் என்பதும் பிறவும் பெறப்படுகின்றன.

சரபமூர்த்தியின் தியானம்

സിംഹാസ്യം സര്‍പ്പപക്ഷം ത്ര്യുഗ്രാ ഭമ ഭയ ഭയദം
ജ്വാലകേശം സുദംഷ്ട്രം ।
പക്ഷാഭ്യാം ചഞ്ചുയുക്തം സാന്ദ്രവാതാവിനാദം
ത്രിശൂലം വജ്രഹസ്തം ।
പാദാക്രാന്തേ നൃസിംഹേ ഹൃദ്യാസിവിദാരണ
പാദപദ്മ ദയാർദ്രം
നീലശ്രീകണ്ഠം ത്ര്യക്ഷം ഭവസി ശ്രീദേവ
ഭാവയേ ശരഭം ദേവം ॥

# ஆலய மந்திரங்கள்

[ஸ்ரீமத் சு. சிவபாதசுந்தரம் B. A. அவர்கள் எழுதியது.]

சுத்தமாம் விந்து தன்னிற் றோன்றிய வாதலானும்
சத்திதான் பிரேரித் தப்பின் றனதிட் டித்துக் கொண்டே
யத்தினற் புத்திமுத்தி யளித்தலா லானுக் கென்றே
வைத்தவா மந்திரங்கள் வடிவென மறைக ளெல்லாம்

சித்தியார், சுபக்கம்: க ரு; ருஅ திரு.

இதற்கு மறைஞானதேசிகரது உரை வருமாறு:--

இ-ள்: சுத்தமாம் விந்து தன்னில் தோன்றிய ஆகலானும் - மந்திரயோனி மகாமாயா என்னும் வாக்கியமுண்டாதலால், விந்துவின் கட் டோற்றமுண்டாகையானும்;—சத்தி தான் பிரேரித்துப் பின் தான் அதிட்டித்துக்கொண்டே - அந்த மந்திரங்களைப் பராசத்தி தானே தோற்றுவித்து, பின்பு அதனைச் சத்தி தானே அதிட்டித்துக்கொண்டே நிற்கையாலும்;—அத்தினல் - அந்தக் காரணத்தினலே,—புத்தி முத்தி அளித்தலால் - இந்த மந்திரங் கொண்டே சிவபூசை அக்கினிகாரியம் ஜபம் முதலியவற்றால் வழிபட்ட ஆன்மாக்களுக்குப் போகமோட்சங் கொடுக்குஞ் சாமர்த்தியம் உண்டாகையினலே;—அரனுக்கு என்றே வைத்தவா மந்திரங்கள் வடிவென மறைகள் எல்லாம் - வேதாகமங்க ளெல்லாம் சிவனுக்கு மந்திரமே திருமேனியென்று அறுதியிட்டுச் சொல்ல நிற்கும்.

மந்திரங்களைச் சிவசத்தி தோற்றுவித்து அதிட்டித்துக்கொண்டு நிற்கையினலே சிவபூசை, அக்கினிகாரியம் முதலிய ஆலயக் கிரியைகள் அவற்றாற் பயன்பெறும் என்பது இத் திருவிருத்தத்தாற் றெருட்டப் படுகின்றது. ஆதலால், இம் மந்திரங்கள் ஆலயங்களுக்கு இன்றியமை யாதனவாகின்றன. இவற்றை நீக்குதலேனும், இவற்றுக்குப் பதிலாகச் சிற்றறிவினையுடைய யாம் தமிழிலேனும், தெலுங்கு முதலியவற்றி லேனும், மந்திரங்களை ஆக்குதலும் அவத்தொழிலென்பது சொல்லா மலே யமையும். தேவார திருவாசகம் முதலிய திருமுறைகள் ஞானவான்களுடைய திருவாக்குகளாதலால் அவைகளும் பராசத்தியால் அதிட்டிக்கப்பட்டுப் பயன் தரத்தக்கவைகளேயாம். ஆயினும், அவை கள் இன்ன கிரியைக்கு இன்ன திருமுறையென்று ஞானவான்களால் வகுக்கப்படாதிருத்தலால், அவைகள் கிரியைகளுக்குச் சிறப்பாக உரி யனவாகா.

மந்திரங்கள் வடமொழியில் உள்ளனவென்றும், அவற்றைத் தமிழிலாக்குதல் தமிழருக்குரியதென்றும் கூறுவோர் சிலருளர்.

சம்ஸ்கிருதம் பரதகண்டத்திலுள்ள யாவருக்கும் பொதுமொழி யாய்ச் சாஸ்திரபாஷையாய் உள்ளது. "அன்றியும், ஆரியச்சொல் எல்

லாத் தேயத்திற்கும் விண்ணுலகம் முதலியவற்றிற்கும் பொதுவாக லால்'' என்றார் சிவஞானமுனிவரும். (நன்னூல் விருத்தி, சொல் கரு)

தமிழர்கள் தமது இலக்கியத்தைத் தமிழிலும் சாஸ்திரத்தைச் சம்ஸ்கிருதத்திலும் பண்டுதொட்டுச் செய்துவந்தனர். தமிழ்க்குரவ ராகிய உமாபதிசிவம் பௌட்கரபாடியத்தையும், சிவாக்கிரயோகியர் சிவஞானபோதபாடியத்தையும், எமது யாழ்ப்பாணத்துக் குரவராகிய ஞானப்பிரகாசர் பௌட்கராகம விருத்தி முதலிய ஒன்பது நூல்களையும் சம்ஸ்கிருதத்தில் இயற்றியமை அது தமிழருடைய சாஸ்திரபாஷை என்பதற்குச் சான்றாகும். இப்படியே பாரதகண்டத்துள்ள ஒவ்வொரு சாதியாரும் தத்தம் சாஸ்திரங்களைச் சம்ஸ்கிருதத்தில் எழுதிவந்திருக் கின்றனர். ஆதலால், சம்ஸ்கிருத மந்திரங்கள் தமிழருக்குரிமையான வைகளேயாம்.

அன்றியும் மந்திரங்கள் மொழிபெயர்க்கப்படத் தக்கவைகளல்ல. தந்தையர்கள் இடுகுறியாக வைத்த வேதாசலம் பாலகிருஷ்ணன் என் னும் பெயர்களை அப் பெயருடையோர் முறையே மறைமலை சின்னக் கறுப்பன் என்று மாற்றியதனாற் குறைபாடியாதுமின்று. மந்திரங்கள் அங்ஙனம் மாற்றப்படத் தக்கவைகளல்ல. அவைகள் விந்துவினின்றும் பராசத்தியாற் றோற்றுவிக்கப்பட்டவை. அவற்றை மொழிபெயர்க் கில், அம் மொழிபெயர்ப்பைச் சிற்றறிவும் சிறுதொழிலுமுடைய யாமே தோற்றுவிப்பவராவர். ஆதலால், அவை சிவசத்தியின் பிரேரகத்தைப் பெறமாட்டாவாய்ப் பயனற்றவைகளாகும்.

முக்கியமான மந்திரங்கள் மொழிகளல்ல. ஆதலாலும், அவை தமிழில் மொழிபெயர்க்கப்படத்தக்கவையல்ல. மந்திரங்களுக்கு முத லிலே வருவதாகிய பிரணவம் ஐந்து எழுத்துக்களேயன்றி மொழியன்று. அதிலுள்ள ஐந்து எழுத்துக்களும் முறையே ஐந்து பொருள்களைக் குறிப்பன என்பது,

> ''இறைசத்தி பாச மெழில்மாயை யாவி
> உறநிற்கு மோங்காரத் துள்.''

என்னுந் திருக்குறளாற் பெறப்படுகிறது. சிவமூலமந்திரமும் மொழி யன்று. அது ஐந்து எழுத்துக்களாய் ஐந்து பொருள்களைக் குறிப்பது என்பது,

> ''ஊன நடன மொருபா லொருபாலாம்
> ஞானநடந் தானடுவே நாடு''

என்பதனால் அறியப்படும். இத் திருவைந்தெழுத்தே நகாராதியாயும் சிகாராதியாயும் ஓதப்படும்போது வெவ்வேறு பயனைக் கொடுக்குமென் பர். அதைத் தமிழாக்குதல் எவ்வாறு?

---

# நாய்ச்சொல்லாராய்ச்சி

[திருமயிலை ஸ்ரீமத் சே. வெ. ஜம்புலிங்கம்பிள்ளை அவர்கள் எழுதியது.]

"நாயேன்", "கடை நாயேன்", "நாயினுங் கடையேன்" முதலிய சொற்களும் சொற்றொடர்களும் திருவாசகத்திலே மலிந்திருப்பது ஆராய்தற்குரியதாம். நாய், பூனை, பன்றி, காகம், கோழி, கழுகு முதலியன அசுசிப் பிராணிகள். இவற்றைத் தீண்டுவதும், போசனம், பூசை முதலிய காலங்களிற் பார்ப்பதும் விலக்கப்பட்டுள்ளன. ஈனப் பிறவிகளாகிய இக் குழாத்துள் ஒன்றாகிய நாயினுங் கீழ்ப்பட்டதாக மாணிக்கவாசகசுவாமிகள் தம்மைத் தாமே பல திருப்பாடல்களில் இழித்துக் கூறிச் செல்லுகின்றனர். இது சிவபெருமானது பெருங்கருணைத்திறத்தையும் தமது சிறுமையையும் எடுத்து உலகினர்க்குக் காட்டியவாறாகும். "நாயினுக்குத் தவிசிட்டு நாயினேற்கே காட்டாதனவெல்லாங் காட்டி," "அடியேற்குப் பொற்றவிசு நாய்க்கிடு மாறன்றே", "நம்மையுமோர் பொருளாக்கி நாய்சிவிகை யேற்றுவித்த" என்னும் அடிகள் இக் கூற்றை வலியுறுத்துவன. (நாயைச் சிங்காதனம், பல்லக்கு முதலியன ஏறச் செய்தல் தகுதிக் கேற்றதன்று என்று கூறியபடி.) இவ்வாறு ஞானிகள் தம்மைத் தாழ்த்திக்கொள்ளுவது இயல்பு. இதைத் துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் பின் வரும் பாடலால் சிறப்பித்திருத்தல் நோக்கற்பாலது.

அருங்கவி வாதவூரனே முதலோ ரன்பிலே மென்றது வேண்டி [ருளாய்.
இரங்குதல் பொய்ம்மை அன்பிலே னெனயான் இயம்பலே மெய்யெனக்க

நாயேன், நாயடியேன் என்னும் சொற்கள் இங்ஙனமே அப்பர், சுந்தரர் தேவாரங்களிலும், வேணாட்டடிகள் திருவிசைப்பாவிலும், பிற்காலத் தோத்திர நூல்களாகிய அபிராமியந்தாதி, திருப்போரூர்ச் சந்நிதிமுறை முதலியவற்றிலும் பிரயோகப்பட்டிருப்பதை ஆங்காங்கே காண்க.

நாய்தான்போல நடுவே திரிந்தும் என்னும் சுந்தரமூர்த்திகள் தேவாரத்தால் அறியக் கிடப்பது யாதெனில், நாய் ஊர் நடுவே திரிவதென்பதும், மனஅமைதி சிறிதும் இல்லாததென்பதுமாம். உலக விவகாரத்தில் அதிகமாக ஈடுபடுபவரை நாய்போல் அலைகிறார் என்று சொல்லும் உலக வழக்கு இங்கே சிந்திக்கத்தக்கது. நாய் என்னும் பதம் குரு சிஷ்யபரிபாஷையுமாம்.

---

# திருநாவுக்கரசு சுவாமிகள் தியானம்

[மு. ஞானப்பிரகாசம் B. SC., ஆசிரியர், பரமேஸ்வரக்கல்லூரி]

திருநாவுக்கரசு சுவாமிகள் திருமுனைப்பாடிநாட்டில், திருவாமூரிலே வேளாளர்குலத்துட்டோன்றி, காவளர்த்தல், குளந்தோண்டல் முதலிய அறவினைகளைச் செய்து, நம்பாருளாமையினால் சமணசமயம் புக்கு, அதற்குத் தலைவராய் இருந்த காலை, தமக்கு நேர்ந்த சூலைநோயைத் தீர்க்கும்பொருட்டுத் தமக்கையாராகிய திலகவதியாரிடம் திருவாளன் திருநீற்றைப் பணிவுடன் வாங்கித் திருமேனி எங்கணும் பரவப் பூசிச் சிவபெருமான் திருவருள் பெற்றுச் சைவனாகி, தமக்கையார் திருவலகும் தோண்டியும் கொண்டு திருக்கோயிற் றிருத்தொண்டின் பெருமையைக் காட்டத் தாமும் உழவாரப்படை ஒன்றேந்தி, திருத்தொண்டில் உறைத்துநின்று, அவ் வுறைப்பினாலே சமணர் விளைத்த பேரிடர்களையெல்லாம் வென்று, அன்பு பெருக நெஞ்சுருகக் கண்ணீர் சொரியத் தமிழ்வேதம் பாடி, திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளுடன் பெருநட்புக்கொண்டிருந்து, பற்பல அற்புதங்கள் இயற்றி, திருக்கயிலைமாமலையில் வீற்றிருக்கும் சிவபெருமானின் திருவருட் பெருங்கோலத்தைத் திருவையாற்றிற் கண்டு களித்து, திருப்புகலூரிலே "புண்ணியா உன்னடிக்கே போதுகின்றேன்" என்று பாடிப் பாடி, நண்ணரிய சிவானந்த ஞானவடிவினராகிச் சிவபெருமான் திருவடிநீழலை அடைந்தவராவர்.

இந்தப் பெருமானாருடைய சரித்திரம் இன்றேல், சைவ சாஸ்திரங்கள் தம்மிலக்கணங்கள் சிலவற்றிற்கு இலக்கியமின்றித் தத்தளிக்கவே நேர்ந்திருக்கும். வாழ்வெனும் மையல் விட்டு, வறுமையாஞ் சிறுமை தப்பித் தாழ்வெனுந் தன்மை எய்தலே சைவனுக்குச் சிறப்பிலக்கணம் என்று எங்கள் சாஸ்திரங்கள் கூறும். இதற்குச் சான்றாகத் திருநாவுக்கரசு சுவாமிகள் சரிதம் போன்ற இலக்கியம் பிறிதொன்றில்லை. திருநாவுக்கரசு சுவாமிகள் ஒருவரே, அந்த இறை அடிமை உணர்ச்சியின் நீளம் அகலம் உயரம் ஆழம் ஆகிய எல்லா எல்லைகளையும் எல்லா நிலைகளிலும் நின்று அளந்த ஒரே ஒரு பெரியாராவர்.

அந்த இறை அடிமை உணர்ச்சியிலே பிறருடைய அனுபவத்திற்கு அகப்படாத ஓர் பேரின்பப் பெருங் பொங்தை அவர் கண்டவரென்றே சொல்லல்வேண்டும். அதனுற்ருன் சிவஞானமும் முறுகிச் சிவானந்த வடிவினராய்த் திகழ்ந்த அந்த எல்லையிலும், அடிமைமார்க்கம் எனப்படும் சரியை மார்க்கத்தை விடாப்பிடியாய்க் கொண்டுசென்ருர். பார்மின்கள்!

வயது எழுபத்தைந்துக்கு மேல் என்றுதான் சொல்லலாம். அதனுல் எம் அப்பர்க்கோ, அவர்தம் திருமேனி திரைந்து தளரவுங் தொடங்கிவிட்டது. ஆயின், அவரை வளர்த்த சிவஞானமோ, முறுகி இடமில்லாமல் இறுகவுங் தொடங்கிவிட்டது. இதற்குள்ளே சுவாமிகள் கயிலையின் பெருங்கோலத்தைத் தரிசிக்க விரும்புகிருர். ஏன் அவ்வாறு விரும்புதல்வேண்டும்? விரும்பிணுலும் ஏன் அந்த அன்பின் செல்வர், அந்தச் சிவானந்த வடிவினர் நடந்தும், கிடந்தும், உருண்டும், புரண்டும், தவழ்ந்தும் எங்கள் மனங்களையெல்லாம் புண்படுத்தி அவ்வாறு போயிருத்தல்வேண்டும்? பெரியோர்களே! இதற்கு மறுமொழியாகவே அப்பர்சுவாமிகளுக்கு அந்த அடிமைமார்க்கத்திலும் அந்த அடிமைவணக்கத்திலும் மற்றவர்களுக்கில்லாத ஒரு தனி ஆர்வம் இருந்ததென்று கூறினேன். அந்த அடிமைவணக்கத்தில் மற்றவர்கள் கண்டறியாத ஓர் இரகசியமான புதையல், ஓர் பேரின்பப் பெரும் பொங்து அவர்க்கு அகப்பட்டிருக்கவேண்டுமென்றும் கூறினேன். அதனுற்ருன் அவர் திருக்கோயிற் றிருவீதிகளை யாரோ ஒரு அடிமை போலப் புரண்டு புரண்டு வலம்வருவார். திருக்கோயிற் றிருவீதிகளில் இரவும் பகலும் உழவாரப் பணிவிடை செய்வார். திருக்கோயிற்றிருப்பணியே பிறவிப்பிணி தீர்க்கும் தப்பாத மருந்து என்றெடுத்துரைப்பார். திருக்கோயிற்றிருப்பணி மருந்தை உட்கொள்ளாத பிரமனும் விட்டுணுவும் பிறவிப்பிணியை இன்னும் தீர்த்தபாடில்லையென்று மேற்கோளும் காட்டுவார்.

"ஆப்பி நீரோ டலகுகைக் கொண்டிலர்
பூப்பெய் கூடை புனைந்து சுமந்திலர்
காப்புக் கொள்ளி கபாலிதன் வேடத்தை
ஒப்பிக் காணலுற் ருரங் கிருவரே."

என்று சுவாமிகள் பிரம விட்டுணுக்களின் கதையைக் கூறுவதைக் காண்க. இவை தம்மால் சுவாமிகள் தம் புறக்கருவி கரணங்கள் திருக்கோயிற்றிருப்பணிவேலையில் ஈடுபட்டிருந்தன என்று அறிகின்றோமல்லவா?

இனி, அவர்தம் அகக்கரணங்கள் எவ்வாறிருந்தன எனின், "மார்பாரப் பொழிகண்ணீர் மழைவாரும் திருவடிவும்," "செம்பொற்றாளே சார்வான திருமனமும்" "சிந்தை இடையறா அன்பும் திருமேனிதனிலசைவும் கந்தை மிகையாங் கருத்தும்" "நாயகன் சேவடி தைவரு சிந்தையும் நைந்துருகிப் பாய்வது போலன்பு நீர்பொழி கண்ணும்" "இடையறாப் பேரன்பும் மழைவாரும் இணைவிழியும்" "சிவபெருமான் திருவடிக்கே பதித்த நெஞ்சும்" என்றென்று வரும் பெரியபுராணக் காஞ்சிப்புராணச் செய்யுளடிகளால் உண்மையை உணர்ந்து அறிக

திருநாவுக்கரசு சுவாமிகள் தம் அருள் பெருகத் தோன்றும் அற்புதக் கருணைவடிவத்தைக் கண்டு அதிசயமுற்று வியந்த சைவ அந்தணர் பெருமக்கள் பற்பலராவர். சைவ வேளாண்மக்களும் பற்பலருளர். திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள், அவர் தம்மை 'அப்பர்' என்றழைத்து அவர்க்கே தங்கள் அடியார்குலத் தலைமைமுடி சூட்டினர். சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருநின்ற செம்மையில் செம்மையாய் நின்ற ஒப்பற்ற பெருமை அந்தத் திருநாவுக்கரசு சுவாமிகளுக்கே உரியது என்று கூறினர். நம்பியாண்டார்நம்பி "சைவப்பெருநெறிக்கே அணியன நாவுக்கரையர் பிரான்தன் அருந்தமிழே" என்றும், "உற்றவிடம் அடையாரிட வொள்ள முதாத் துற்றவன் ஆமூரினாவுக் கரசனும் தூமணியே" என்றும் அவர் தம்மைப் பற்பலவாறு புகழ்ந்தும் வியந்தும் பாடியிருக்கின்றார். அப்பூதியடிகள்நாயனார் அவர்தம் தாளிணைக்கே சரண்புகுந்து, அவர்தம் திருநாமத்தையே எழுதியும் உச்சரித்தும் பெருவாழ்வு அடைந்த பெரியாராவர். இங்ஙனம் எம் பெருமக்கள் பலராலும் வியந்து பாராட்டப்பட்ட அற்புதக் கோலத்தினராய திருநாவுக்கரசு சுவாமிகளின் தியான சுலோகம் எம்முயிர்க் குற்ற பிணியைத் தீர்க்க வல்ல மருந்து என்பது வெளிப்படை. அதனை இவ்விடத்தில் தருகின்றோம்.

ஏகவக்த்ரம் யுக்மகராஞ்ஜலி ஸநாதம்
கக்ஷ்யத்ருதவாஸ்ராக்ருத ஶிவாலயஸேவம்।
ஶ்வேதகளேபரஸ்தித ஸதாநந்தஸதாஹம்
ஸர்வஶிவபக்தகுரும் ஶிவாக்ரணீமுபாஸே॥

பல்லாயிரக்கணக்கான நினைவுகளையும் எண்ணங்களையும் உடைய எம்மைபோலல்லாது திருநாவுக்கரசு சுவாமிகள் ஒரே சித்தத்தையுடைய பெருமானாராதலால் 'ஏகவக்த்ரம்' என்றும், அவர்தம் அகவொழுக்கத்தை அப்படியே புறத்தில் வெளிப்படுத்திக் காட்டுவது அவர்தம் அஞ்சலியாகக் குவித்த திருக்கரங்களாதலால் 'யுக்மகராஞ்ஜலிஸநாதம்' என்றும், அஞ்சலியாகக் குவித்த கரங்களுள், உலகமுய்ய அவர் பேணி வைத்திருந்த பொக்கிஷமும், அவர் தொண்டாண்ட பிரான் என்பதைக் குறிக்கும் செங்கோலும், அவர் சிவாலயத் திருப்பணி செய்த அவர்தம் உழவாரப்படையேயாதலால் 'கக்ஷ்யத்ருத வாஸ்ராக்ருத ஶிவாலய 'ஸேவம்' என்றும், அவர் தூயவெண்ணீறு துதைந்த பொன்மேனியராய், ஆனந்த வெள்ளத்தினிடை மூழ்கி, அம்பலவர் தேனுந்து மலர்ப் பாதத் தமுதுண்டு, அவர்தம் திருவடிநீழலில் உறைந்து, சதா நிட்டை எய்தி அகமும் புறமும் வாழும் பெருமானாராதலால் 'ஸதாநந்தஸதாஹம்' என்றும், அவரே அகத்துறவு, புறத் துறவு என இரண்டும் சரிவரக் கைவந்த பெரியோராய்ச் சிவனடியார்குலத்தின் தலைவராய்க் குருவாய்ச் சிரோரத்தினமாய் விளங்குபவராதலால் 'ஸர்வஶிவபக்தகுரும் ஶிவாக்ரணீம்' என்றும், அப்படிப்பட்ட அவர்தம்மை உள்ளத்திலிருத்திக் தியானிப்பதனால் எவர்க்கும் பிறவிப்பிணி சத்தியமாய் நீங்குமாதலால் 'உபாஸே' என்றும் கூறப்பட்டதென அறிக.

உபாஸ் -உள்ளத்திலிருத்தித் தியானித்துத் தம்மிடத்தில் விளங்குப்படி செய்தல். இச் சொல் ஆஸ் என்னும் வினை அடியிற் பிறந்து உப என்னும் உபசர்க்கத்துடன் கூடி, நிகழ்கால ஒருமைத்தன்மை விகுதி பெற்று உபாஸே என வரும் வினைமுற்றாகும்.

பொழிப்புரை:—ஒரு முகத்தையுடையவரும், அஞ்சலியாகக் குவித்த இரு திருக்கரங்களையுடையவரும், சிவாலயத்

திருப்பணி செய்யும் உழவாரப்படையை ஏந்தியவரும், தூய வெண்ணீறு துதைந்து குளிர்ந்த பொன்மேனியை யுடையவரும், சிவனடியார்க்குத் தலைவராய்க் குருவாய்ச் சிரோரத்தினமாய் விளங்குபவருமாகிய அப்பர்சுவாமிகளை உபாசனை செய்கின்றேன்.

இடையருப் பேரன்பும் மழைவாரும் இணைவிழியும் உழவாரத்தின்
படையருத் திருக்கரமும் சிவபெருமான் திருவடிக்கே பதித்த நெஞ்சும்
நடையருப் பெருந்துறவும் வாகீசப் பெருந்தகைதன் ஞானப் பாடல்
தொடையருச் செவ்வாயும் திருவேடப் பொலிவழகும் துதித்து வாழ்வாம்.

சுபம்

---

# கவியோவியம்

[திருமயிலை ஸ்ரீமத் சே. வே. ஜம்புலிங்கம்பிள்ளை அவர்கள் எழுதியது.]

புகைப்படம் எடுக்கும் வழக்கம் பண்டைக்காலத்தில் இல்லை. ஆனால் சித்திரப்படங்களும் உருவச்சிலைகளும் உண்டு. இவற்றைப் பின்பற்றியேபோலும் கவிகள் தங்கள் கதாநாயகர்களை உருவகப்படுத்துவது. பெரியபுராணத்தில் சேக்கிழார் நாயனார் இரண்டு திருப்பாசுரங்களால் அப்பர்சுவாமிகளின் திருவுருவத்தைச் சித்திரித்திருக்கும் அழகை என்னென்று எடுத்துரைப்பது? அப்பாடல்களைப் படிக்கும்போதே நமது மனக்கண்ணின் முன் சமயாசாரியசுவாமிகளின் திருக்கோலம் தோற்றுகிறது. சேக்கிழார்நாயனருக்குப் பின் வந்த கவிஞர்களும் இவ்விரண்டு பாடல்களை யொட்டியே தாங்காம் அப்பர் சுவாமிகளுக்குத் துதிகள் கூறியிருப்பது அவதானித்தின்புறத் தக்கது.

சேக்கிழார்

தூயவெண் ணீறு துதைந்தபொன் மேனியும் தாழ்வடமும்
நாயகன் சேவடி தைவருஞ் சிந்தையும் நைந்துருகிப்
பாய்வது போலன்பு நீர்பொழி கண்ணும் பதிகச்செஞ்சொல்
மேய செவ்வாயு முடையார் புகுந்தனர் வீதியுள்ளே.

சிந்தையிடை யறாவன்புந் திருமேனி தனிலசைவும்
கந்தைமிகை யாங்கருத்தும் கையுழவா ரப்படையும்
வந்திழிகண் ணீர்மழையும் வடிவிற்பொலி திருநீறும்
அந்தமிலாத் திருவேடத் தரசுமெதிர் வந்தணைய.

சிவஞானமுனிவர்

இடையறாப் பேரன்பு மழைவாரு மிணைவிழியு முழவாரத்தின்
படையறாத் திருக்கரமுஞ் சிவபெருமான் திருவடிக்கே பதித்தநெஞ்சும்
நடையறாப் பெருந்துறவும் வாகீசப் பெருந்தகைதன் ஞானப்பாடற்
றொடையறாச் செவ்வாயுஞ் சிவவேடப் பொலிவழகுந் துதித்து வாழ்வாம்.

கச்சியப்பமுனிவர்

கொண்ட லாடிய விழிகளும் கோலவெண் ணீற்று
வண்ட லாடிய மேனியு மல்குமா னந்தம்
உண்ட தாங்கெதி ரெடுத்தென வோதுசெம் பாட்டுங்
கண்டு கேட்டருள் நாவினுக் கரசினைக் கலப்பாம்.

மீனாக்ஷிசுந்தரம்பிள்ளை

கந்தைமிடை யாங்கருத்துங் கையுழவா ரப்படையும் கவின்வெண் ணீறும்
சிந்தையிடை யறாவன்புஞ் சிவஞானம் பழுத்தொழுகு செய்ய வாயும்
தந்தையொடு தாயிலான் திருவடிதை வருமனமும் தாரைக் கண்ணும்
நிந்தையறு முழுத்துறவு முடையபிரா னடிபணிந்து நீடு வாழ்வாம்.

இவை பாடல்கள் அப்பர்சுவாமிகளின் சிவவேடப் பொலிவழகை விளக்குவன. பூசிற்றான் திருநீறே நிறையப் பூசி என்பதற்கிணங்கச் சுவாமிகளது திருமேனி முழுவதும் விபூதிமயமாய்ப் பிரகாசிக்கின்றது. நெக்கு நெக்குள் ளுருகியுருகி அழுவதால் கண்களினின்றும் ஆனந்தக்கண்ணீர் பெருகுகின்றது. கண்ணீர்ப்பெருக்கால் உடம்பெங்கும் நனைகின்றது; உத்தூளிக்கப்பட்ட திருநீற்றோடு கலக்கின்றது. இதனால் விபூதிக்குழம்பு திருமேனியில் உண்டாகின்றது; இதனையே வண்டலாடிய மேனி என்று கச்சியப்பர் பாராட்டுகின்றார்.

(—இந்துசாதனத்திலிருந்து அனுவதித்தது.)

---

அகில இலங்கைச் சைவஇளைஞர் மத்தியமகாசபை

# நிருவாகசபைக் கூட்டம்

விக்கிரமஆண்டு ஆவணிமாதம் 24ந் திகதி கூடிய கூட்ட வரலாறு:—

சமுகமளித்தவர்கள்:—

திருவாளர்கள்: கா. அருளம்பலம், இ. சிவகுருநாதர், வி. வீரசிங்கம், நா. சிவபாதம், சி. க. வேலாயுதபிள்ளை, க. கி. நடராஜன், சி. கந்தையா, சி. சோமசுந்தர ஐயர், ச. சின்னத்தம்பி, ச. சுப்பையா, அ. நாகலிங்கம், அ. வீரசிங்கம், ச. சேனாதிராசா, மு. சின்னத்தம்பி, வே. சோமசுந்தரம், க. வைரவநாதன், மு மயில்வாகனம்.

விக்கிரம ஆண்டு ஆவணிமாதம் 24ந் திகதி ஞாயிற்றுக்கிழமை (8-9 40) பிற்பகல் 3-50 மணியளவில் யாழ்ப்பாணம் இந்துக்கல்லூரி ஆசிரியர் மண்டபத்தில், தலைவர் நவாலியூர் திரு. க. சோமசுந்தரப்புலவர் அவர்கள் உடல்நலக்குறைவால் சமுகமளிக்காதபடியால் உபதலைவர்களுள் ஒருவராகிய திரு. வி வீரசிங்கம் அவர்கள் தலைமை வகிக்கத் தேவாரபாராயணத்துடன் கூட்டம் ஆரம்பமானது. விக்கிரம ஆண்டு சித்திரைமீ 12-ந் திகதி (24 4 40) புதன்கிழமையன்று கூடிய நிருவாக சபைக்கூட்ட வரலாறு படிக்கப்பட்டது. இப்பொழுது நடக்கும் யுத்தத்தில் நமது அரசினருக்கு வெற்றியுண்டாகவேண்டுமென்று எல்லோரும் எழுந்து கடவுள்வழிபாடு செய்தார்கள். அதன்பின்னர் "இம்முறை வரும் விஜயதசமியிலன்று சைவத்தேவாலயங்களிலும் சைவவித்தியாலயங்களிலும் நமது அரசினருக்கு வெற்றியுண்டாகும் நோக்கத்துடன் ஆராதனைகள் நடைபெறவேண்டுமென்று ஷை சபை கோருகின்றது" என்ற தீர்மானம் ஏகமனதாக அங்கீகரிக்கப்பட்டது.

குருமார்வகுப்பு, திருப்தியான முறையில் ஒரு வகுப்பை நடத்துதல் இப்பொழுது கஷ்டமெனக் கருதி ஆரம்பவகுப்பொன்றை மாத்திரம் வருகிற விஜயதசமியிலன்று தகுதியான ஒரு ஆசிரியரை நியமித்துத் தொடங்கலாமென்றும், அவ் வகுப்பிற் சேர விரும்பும் பிள்ளைகள் தங்கள் தங்கள் பெயர்களை விஜயதசமிக்கு முன்பு காரியதரிசிக்கு அனுப்பி வைக்குமாறு பத்திரிகை மூலம் கேட்கப்படவேண்டுமென்றுந் தீர்மானிக்கப்பட்டது. குறித்த வகுப்பில் ஆரம்பத்தில் ஆதாரக்கல்வியும் கிரியாபாகங்களும் படிப்பிக்கப்படவேண்டுந் தீர்மானிக்கப்பட்டது.

அடுத்த அகில இலங்கைச் சைவஇளைஞர் மகாநாடு மார்கழிமாதம் 11, 12, 13-ம் நாட்களில் (25, 26, 27-12-40) யாழ்ப்பாணம் இந்துக் கல்லூரியில் கூடலாமென்று தீர்மானிக்கப்பட்டது. ஷை மகாநாட்டுக்கு ஆகவேண்டிய ஒழுங்குகளைச் செய்வதற்குத் திருவாளர்கள்: இ. சிவகுருநாதர், கா. அருளம்பலம், அ. நாகலிங்கம், க. கி. நடராஜன், சி. சோமசுந்தரஐயர், மு. மயில்வாகனம் ஆகிய அறுவரையும் அங்கத்தவர்களாகக் கொண்ட உபசபையொன்று தெரியப்பட்டது. ஷை மகா

நாட்டில் பிள்ளைகளுக்குத் தேவாரப் பரிசிலும் உபந்நியாசப் பரிசிலும் வழங்க ஒழுங்குசெய்யவேண்டுமென்றும் மேடி பரிசிலின்பொருட்டுப் பிள்ளைகளை மூன்று பிரிவினராகக் கொண்டு தேர்தல் நடத்தலாமென் றூர் தீர்மானிக்கப்பட்டது.

சிழ்ப்பிரிவு 10 வயதுக்குட்பட்டவர்கள்
மத்தியபிரிவு 11 வயது தொடக்கம் 15 வயது வரை உள்ளவர்கள்
மேற்பிரிவு 16 வயது தொடக்கம் 20 வயது வரை உள்ளவர்கள்

தேவார மத்தியஸ்தர்கள்

திருவாளர்கள்: த. குமாரசுவாமிப்பிள்ளை
,, சு. செல்வத்துரை
,, ச. கி. நடராஜன்.

உபந்நியாச மத்தியஸ்தர்கள்

திருவாளர்கள்: க. சோமசுந்தரப்புலவர்
,, ச. தி. சதாசிவஐயர்
,, வே. சோமசுந்தரம்

தேவாரத் தேர்தலை விக்கிரம ஆண்டு கார்த்திகைமீ 9-ந் திகதியில் அன்றும், உபந்நியாசத் தேர்தலை விக்கிரம ஆண்டு கார்த்திகைமீ 16-ந் திகதியிலன்றும் நடத்தலாமென்றூர் தீர்மானிக்கப்பட்டது.

மேற்காட்டிய ஒழுங்குகள் செய்யப்பட்ட பின்னர் நீர்வேலிச் சைவ வாலிபர்சங்கத்தாரால் சைவமுன்னேற்றத்தைக் குறித்து அனுப்பப் பட்ட கடிதங்கள் அச் சபையின் காரியதரிசியால் படிக்கப்பட்டன. மகாநாடு முடிந்தபின்னர் நிருவாகசபையின் ஆலோசனைக்கு அக் கடிதங் களை மத்தியமகாசபைக் காரியதரிசி சமர்ப்பிக்கவேண்டுமென்ற முடி வுடன் கூட்டம் தேவாரபாராயணத்துடன் நிறைவெய்தியது.

யா. இ. ச: } மு. மயில்வாகனம்
10-9-40. } காரியதரிசி.

[முன் தீர்மானித்தபடி ஆசமவகுப்பு விஜயதசமியில் ஆரம்பமாய், ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமைகள்தோறும் நடைபெற்றுவருகிறது.]

---

# ஓர் வினா

நவராத்திரி உற்சவத்திற்கு அமாவாசையன்று ரக்ஷாபந்தனம் செய்யலாமா? இவ்விடத்தில் சில இடங்களில் அமாவாசையன்று ரக்ஷா பந்தனம் நடத்தியிருக்கிறார்கள். சாஸ்திரங்களில் ஆதாரமிருந்தால் அறிஞர்கள் தெரிவிக்கும்படி கேட்டுக்கொள்ளுகிறேன்.

ஆகமாபிமானி
தென்னிந்தியவாசி.

---

# ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் குருபூஜையும், பிரசங்கமும்

ஸ்ரீ கொங்குமண்டல ஆதிசைவப்பிராமண மகாசபையினர் அவிநாசியில் குருபூஜைவிழா நடத்தியபோது சிவஸ்ரீ காசிவாசி ஈசானசிவாச்சாரியார் அவர்கள் செய்த சொற்பொழிவு.

(தொகுத்தவர் M. R. நாகேசுரக்குருக்கள் மானேஜர் "சிவா மெவித்யா")

சென்ற விக்கிரமவருடம் ஆடிமீ 26ம் தேதி சுவாதிநாள், அவிநாசியில் ஆதிசைவசிவாசாரியர்கள் ஆதரவில், ஸ்ரீ கொங்குமண்டல ஆதிசைவப்பிராமண மஹாசபையாரால் ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் திருநக்ஷத்திரவிழாச் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது.

அதுகாலை, அவிநாசியப்பர் சந்நிதியில் வலையபாளையம் ஸ்ரீமத் ஆலாலசுந்தரபண்டிதகுருசுவாமிகள் தலைமையில் சிவஸ்ரீ K. P. சுப்பிரமணியசிவாசாரியர், M. R. நாகேசுரக்குருக்கள், சு. சுப்பிரமணியக் குருக்கள், அ. சி. கருணாலயசுவாமிகள் என்போர் ஸ்ரீ ஆசாரியசுவாமிகள் வைபவங்களைப் பல பகுதிகளாகப் பிரித்துப் பேசினார்கள். பின்னர் காசிவாசி சிவஸ்ரீ ஈசானசிவாசாரியார் அவர்கள் ஆரூரர் சரித்திரத்தை ஆதரவாகக்கொண்டு அடியிற் காணும் சொற்பொழிவு செய்தார்:—

'வைதிக சைவ மெய்யன்பர்களே!

பெரியபுராணத்துக்கு வைரம் போன்றது ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் சரித்திரம். முன்னும் இன்றும் பின்னும் ஆக உலகில் முக்காலங்களிலும் உதவக்கூடியது இது.

உலகத்தின் நிலை, மனிதன் தன் வாழ்க்கையே சிறந்ததென்று கருதி ஏமாந்துபோதலே. சிலர், நமக்குப் பின் உலகம் கெட்டுவிடும்; உலகத்தில் நல்லவர்கள் இல்லாதுபோய்விடுமே! என்று கருதுகின்றனர். தாங்களே நீண்டநாளிருந்தும் வாழ்ந்தும் உள்ளீடில்லாததும், குறிக்கோளற்றதும் ஆகிய இத்தகைய வாழ்வையே பின்னும் விரும்புகின்றனர். நம் ஆன்மவிசாரணை மனிதன் கடமை. ஆகவே, அனைவரையும் சேட்டுக்கொள்வதும் அதுவே.

நான் விளக்கும், நீங்கள் விளக்கை எரிக்கின்றவர்களுமாய் (பல்பும் சுவிச்சும்) இருந்து பிரசங்கம் கேட்டல்வேண்டும். நீங்கள் விளக்கை எரிக்கின்றவகையில் சிறிது கவனக்குறைவாய் இருப்பீர்களானால்,

விளக்கு நின்றுவிடும். விளக்கை எரித்து அதன் ஒளியைப் பயன்படுத்திக்கொள்பவர்கள் நீங்களே. ஆதலால், அந்த முறையில் அவதானமாய் இருக்கவேண்டும்.

மனிதன் வாழ்க்கையில் உள்ளீடில்லாத, குறிக்கோளில்லாத வாழ்க்கை இன்று நான் வருங் காலையில் கண்ட காட்சியேதான். நான் பஸ்நிலையத்தில் சில மணி நேரம் தங்கியிருக்க நேர்ந்தது. அதன் சமீபத்தில், ரஸ்தாவுக்காகப் போட்டிருந்த ஒரு கற்குவியலின் பக்கலில் ஒருவன் நின்றான். அவன் சிறிதுபொழுது கழித்துத் தன் வேஷ்டி ஒன்றை விரித்து, தன்னால் தூக்கும் அளவு கற்களை நிரப்பி, பின் அதைத் தோளிலேற்றி, சிறிதுதூரம் திரும்பி முன் எடுத்த இடத்துக்குச் சமீபித்து ஒவ்வொன்றாய்க் கீழே போட்டுவிட்டுப் பிறகு வந்து நின்றுகொண்டான். அவன் பித்தன் என்ற நிலையில் இருக்கலாம்; இது போலத்தான் மனிதர்கள் வாழ்க்கையின் குறிக்கோளிருக்கின்றது.

அன்னப்பக்ஷியைச் சொல்முறையில் மாத்திரம் தெரிதல் போல வாழ்வு என்பதைக் கருதியுள்ளோம்.

முன்னோர் வாழ்க்கையில் எல்லோரும் ஒப்பும்படியான உயர்நலங்களைக் காணலாம். மனிதன் என்பதற்குத் தன்னில் தாழ்ந்தவர்களைத் தின்றல் என்ற பொருளைக்கொண்ட அகராதி வேண்டுங் காலமிது. திருக்கைலாயத்தில் தக்ஷிணாமூர்த்தி ஞானோபதேசம் நின்றுவிட்டாலும் நாம் இங்கு அதை அவசியம் செய்தல் வேண்டும்.

ஒல்லும் வகையான் அறவினை யோவாதே
செல்லும்வா யெல்லாம் செயல்.

மனிதன் என்பவன் மனஉணர்வோடு கூடியவன். மற்றவை மிருக இனம். உலகமே தனக்கடிமையென நினைக்கிறது மனிதவர்க்கம். இதுபோன்ற பிரசங்கம் முதலான இடங்களில் அவர்களுக்கு இடமில்லை. வடநாட்டில் பிரசங்கம், கதை இவைகளுக்கு 6 பைசாவுக்குச் சாமான் தூக்கும் கூலி தனது கூலிக்குப் போகும் வேலையை விட்டு "த்யான் கர்த்தாஹே" என்று பிரசங்கம் முடியும் வரை தன் லக்ஷியத்தை இதிலே செலுத்தியிருப்பான். நம் நாட்டிலே "கடன் கொடுத்தவர்கள் கவனமில்லை, கொண்டுவா, ஜபமாலை" என்பது பெரிய மேதாவிகள் செயல். கல்வி, சமயஞானம் என்பது என்ன என்றால் அது முயற்கோடு. இந்தச் சிறப்பெல்லாம் நம் நாட்டுக்கே உரியது, வேறு நாட்டு உதாரணம் நமக்குத் தேவையில்லை.

### வாழ்விலே இடம்பெறவேண்டுவது சமயம்

அறிவுடையவன் என்ன சிந்திக்கின்றான்? என்ன சிந்தித்தல்வேண்டும்? நமது உடல் நிலையாமை சிந்தித்தல்வேண்டும். மனிதர், மிருகம் முதலியவைகட்கு உடலை நலப்படுத்துகின்ற டாக்டர்களின் உடலையும் பாழ்படுத்திவிட்டு உயிர்போவதைக் காண்கிறோம். இதன் உண்மையை

"தந்தையார் போயினர் தாயாரும் போயினர்"

என்ற வாகீச சுருதி நமக்கெல்லாம் அறிவிக்கின்றது. மனிதர்கள் இடருற்றலைவது வாழ்க்கையின் குறிக்கோளை யறியாமையே. இனி, தேவர்கள்வாழ்விலாவது குறிக்கோ ளிருக்கின்றதா? அங்கும் இதைக் காட்டிலும் துன்பம் விரவியே இருக்கின்றது. காரணம் குறிக்கோள் இன்மையே. சூரபதுமனால் பட்ட வருத்தத்தைச் சிவபெருமானிடத்தில் முறையிடச் சென்ற தேவர்களை ஒன்றுமறியாதார் போலச் சிவபெருமான் "நீங்கள் நலமுடையீரா?" என, "நாங்கள் எந்த நாள் இடரற்றிருந்தோம்" என்று வருந்துகின்றனர். மனிதர்கள் வாழ்க்கையில் நற்செயல் செய்யாததே லக்ஷியக்குறைவாகும். நன்னெறியாக வாழுக. நற்பணிக்குத் தீவினைவிட்டீட்டிய பொருள்கொண்டே வாழ்தல் வேண்டும். சமயப்பற்றாகிய பூதிசாதன மணிதல் கடமை. பெண்களும் பூதியணிதல் அவசியம்.

நமது சமயமே பெண்களின் உதவிஉபசாரத்துக்கு உடனாவது. அதற்குப் பல உதாரணங்களாகச் சரித்திரமுள. ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் சரித்திரத்திலும் நாம் காண்பது இரு பெண்மணிகளே. அவர்களை உடைய வாழ்க்கையே இன்று நாம் இங்கு பேசிப் பயனடையும் வாழ்க்கைச்சரித்திரம்.

பணக்காரர் என்பவர்கள், வாழ்க்கையைச் சிறிதும் உணராமல் இம்மாதிரிப் பெரியார் திருநாட்கள், விழாக்கள், பிரசங்கங்கள், கதைகள் முதலிய இடங்கட்குப் போனால் ஏதேனும் தமது வாழ்க்கைக்குப் பொருளுக்கு இடையூறு வருமென்றே போகாதொழிகின்றனர். தங்கள் பொருட்காப்பு ஒன்றையே குறிக்கோளாய்க் கொண்டுள்ளார்கள். அந்தோ! ஒரு பணக்காரனைப் பணக்காரனல்லாதவன் "உன்னுடைய பணம் முழுமையும் என்னுடையது" என்றபோது, பணக்காரன் மிகுந்த கவலையோடு "எப்படி?" என்று கேட்க, "பணத்தை நானும் செலவிட முடியாது; என்னிடத்தில் இல்லாததினால். நீயும் செலவிட முடியாது; உனக்குப் பொருள் சேர்க்கும் அவாவினால். ஆனால் உன்னைக்காட்டிலும் எனக்கு இன்பம்; உனக்குத் துன்பமே. (நான் காக்கவேண்டிய வேலையில்லை; நீ வைத்துப் பாதுகாக்கவேண்டிய வேலை தொல்லை.),, என்று சொல்லியும் அவன் வாழ்க்கை அதினின்றும் மாறவில்லை. அந்தோ! இதற்கா ஆண்டவன் மனிதனைப் படைத்தான்? இவர்கள் போன்ற

ஆன்மாக்கள் என்று வாழ்க்கையைப் பெறுவது? வாழ்க்கையின் தத்து வங்கள் நிறைந்த பெரியார்களுடைய விழா, பிரசங்கம் இவைகளில் இவர்கள் கலந்துகொள்ளவேண்டும். இவர்களுக்காக இவர்களிடை யில் நாம் செய்யவேண்டிய கடமை,

"நடலை வாழ்வுகொண் டென்செய்தீர் நாணிலீர்
சுடலை சேர்வது சொற்பிர மாணமே
கடலி னஞ்சமு துண்டவர் கைவிடின்
உடலி னார்கிடந் தூர்முனி பண்டமே."

"ஓவுநாளுணர்வழியுநாளுயிர்போகுநாளுயர்பாடைமேற்
காவுநாளிவையென்றலாற்கருதேன்கிளர்புனற்காவிரிப்
பாவுதண்புனல்வந்திழிபாஞ்சோதிப்பாண்டிக்கொடுமுடி
நாவலாவுனைநான்மறக்கினுஞ்சொல்லுநாநமச்சிவாயவே."

என்னும் சுருதிகளைச் சொல்லிச் சொல்லி நெறிப்படுத்துதல். புசுழை வெறுத்தவன் செய்கை மேலானதாகும்.

வாழ்க்கையைச் சீர்ப்படுத்துவது சரீரத்தில் வந்த நோயை (சிலந் தியை) அறுத்து நேர்செய்தல் போலவாம். நாம் திருந்தி மற்றையோ ரைச் சீர்திருத்த முயலவேண்டும். வாழ்க்கையில் அகவாழ்வு, புற வாழ்வு, தூய்மைவாழ்வு, அசத்தியவாழ்வு இப்படிப் பல வாழ்வுகள் இருக் கின்றன. பின்னையதை யொழித்து, முன்னைய வாழ்வுகள் வாழ முயல வேண்டும்.

மனிதனில் மனிதன் இணைக்கப்பட்டிருக்கிறான். ஆதலால், நம் வாழ்வைக் கண்டு இன்னொருவர் வாழ்க்கை திருந்தும். இணைப்பு றெயில்வண்டித் தொடர்போல இணைக்கப்பட்டிருக்கிறது. ஒரு வண்டி யில் ஏதேனும் பேதம் ஏற்பட்டால் முன்னால் இருக்கும் இஞ்சினி லிருந்து பின்னுள்ள கார்டுவண்டி வரை அதே மாறுதலை நாம் காண் கிறோம். அதுபோல மனைவிமக்கள் துன்பம் வந்தகாலை நாம் கவலை அடைகின்றோம். நம்மில் அவர்கள் இணைக்கப்பட்டிருத்தல் போல, அவரவர்கள் தாய்தந்தை, சகோதரர்கள். இப்படியே சென்றால் எல்லாம் ஒன்றிலொன்று இணைப்பென்பது நன்கு தெரியும். உலகத்திலுள்ள ஒவ்வொரு உயிரிலுள்ள வாழ்வும் இவ்விதமே நம் வாழ்வில் இணைக்கப் பட்டிருக்கிறது. இந்தக் குறிப்பை என்று மனிதவாழ்வு உணருகிறதோ அன்றுதான் வாழ்வு வாழ்வாகும். மன்னர்கள், பிரபுக்கள், வித்துவான் கள் பலர் ஒழிந்தன நினைந்து நாம் நம்மை உணருவோம். மரணத்தை நினைக்கவேண்டும். மனிதர் பலர் தங்கட்கு மட்டும் வாராது, ஏதோ மற்றையோருக்குத்தான் வரும் என்று எண்ணியுள்ளார்கள். அந்த எண் ணம் மாறி எல்லோருக்கும் மரணம் உண்டென்பதைக் கவனத்தில் வைக்க வேண்டும். இது மன உணர்வாகும். மனவுணர்ச்சி, மதவுணர்ச்சி இல்லாத நாடு ஒழிந்துபோதல் உண்மை. மனவுணர்வு உள்ள நாட்

டிலே மனவெழுச்சி அழிவதில்லை. மனிதவர்க்கத்தை அழித்தல் இலேசான காரியமன்று. மதவுணர்வு நிலையாமை பல எடுத்துக்காட்டுகிறது. பணக்காரன் மற்றவர்களைப்பற்றிக் கவலையின்றி யிருப்பதால் பிணத்தோடு ஒப்பர். மற்றவர்களே இப் பிரசாரத்துக்கு உரியவர்கள். இது பல உதாரணம். நிலையாமை தெரிந்து கடவுளை வணங்குங்கள். இந்த வகையில் உலோபியர்கள் அல்லாதவர் தன்மை விளங்குகிறது.

புலன்கள் அடக்க முடியாமையைக் கருதிக் கடவுளை வழிபடுவது சமயம், மதம் என்பது. இவை எல்லார்க்கும் இன்றியமையாத வேண்டற்குரியது. அதற்கு வேண்டிய எல்லா நூல்களையும் கண்டு ஞானத்தையே குறிக்கோளாயிருத்தல், ஞானத்தோடு சம்பந்தம் வாழ்வில் முதற்படியாயிருக்கவேண்டும். (உணர்த்தவந்தது திருஞானசம்பந்த சுவாமிகள் சரித்திரம்) அது இலகுவில் வாய்ப்பதன்று. இடைவிடாது தொண்டு செய்தல். (உணர்த்தவந்தது அப்பர்சுவாமிகள் சரித்திரம்) தொண்டுக்கு இடையூறில்லாத மனைவிகள் ஒருவரல்ல; இருவராயும் இருக்கலாம். நம் குறிக்கோள் மாத்திரம் பிறழாது நெறிநிற்றல். (உணர்த்தவந்தது ஸ்ரீ சுந்தரபரமாசார்ய சுவாமிகள் சரித்திரம்) முடியாததெல்லாம் அழுது பெறலாம். (உணர்த்தவந்தது அழுதடியடைந்த திருவாதவூரர் சரித்திரம்.) இந் நான்கையும் நாம் இச்சிப்போமானால், நமது வாழ்க்கையில் அன்பைக் குறிக்கோளாகக் கொள்வோமானால் வாழ்க்கையில் நெறியை யடையலாம். பிரபஞ்சக்கடலில் ஞானம், யோகம், கிரியை, சரியை என நான்கு முத்து நால்வர் எடுத்துத் தந்தது.

இனி, ஆசாரியர் சுந்தரமூர்த்திசுவாமிகள் வாழ்க்கை வரலாற்றில் சென்று பார்த்தல் மனிதர் எல்லாவகையிலும் பின்பற்றத்தக்க வாழ்க்கை. மனிதன் செய்யவேண்டுவது என்ன எனில், பூஜை எதொன்றும் பூஜாபலன் என்று சொல்வதைக் காண்கிறோம்; கேட்கிறோம். ஆகவே, பூசையால் தான் எல்லாம் எய்தலாம் என்பது. புண்ணியனைப் பூசித்த புண்ணியம் புண்ணியமால். பெரியதாய்க் காண்பது எளியதாய் உபயோகப்படுத்த இயலும். உதாரணம்: திருவாரூர்த் தேர் மிகப் பெரியது. அது சாதாரணமாக மனிதர்களாலே இழுக்கப்படுகிறது. கடவுளாகிய தேரை, அன்பாகிய சக்கரம், வடம் முதலியவைகளால் மிக இலகுவாக இழுக்கலாம். அரியவன், பெரியவன் என்றவன் எல்லோருக்கும் வசதியளித்தல்வேண்டும். அவ்வித வசதியளித்துள்ள சமயம் சைவசமயம். அதில் பூசை சிறந்தது. அது எளிய குடங்கை நீரும் பச்சிலையும்—நொச்சியம்பச்சிலை—பச்சிலைக்கு மெச்சுங் கடவுள்—பச்சிலைக்குப் பலன் கருவிடைப் புகாமல் காக்கும் கடவுள். எளிதிலே சாதித்துத் தரும் மார்க்கம் நம் சமயம். எந்தக் காலத்துக்கும் இந்த நூற்றாண்டுக்கும் ஆராய்ச்சிக்கு ஒப்புவது நம் சமயம். (தொடரும்,)

---

# அன்னாபிஷேகம்

நாளது விக்கிரம௵ ஐப்பசி௴ 28௳ புதன்கிழமை அன்னாபிஷேகம் எனவும், 29௳ வியாழன் அன்னாபிஷேகம் எனவும் சில பஞ்சாங்கங்களில் போடப்பட்டிருப்பதால் எத் தினம் செய்யவேண்டியது என்று சிலர் என்னைக் கேட்டிருக்கிறார்கள்.

உத்தரகாரணாகமம்

[illegible] ।

[illegible] ॥

என்றபடி பௌர்ணிமையாயிருந்தாலும் இல்லாதிருந்தாலும் அஸ்வினி நக்ஷத்திரம் என்றைய தினமோ, அன்றைய தினமே அன்னாபிஷேகம் செய்யத்தக்கது என்றபடி நாளது விக்கிரம௵ ஐப்பசி௴ 28௳ புதன் கிழமையில் செய்யப்படுவது சாஸ்திரயுக்தமாம். இதே அன்னாபிஷேகச் சந்தேகம் கடந்த பிரஜோத்பத்தி௵ (1931) ஐப்பசி௴ 9௳ 10-ந் தேதியில் சந்தேகம் வந்து. ஷை பிரஜோத்பத்தி௵ புரட்டாசி௴ 12௳ 19௳ நமது பலவான்குடி சிவநேசன் பத்திரிகையில் வெளியிடப்பட்டிருக்கிறது குறிப்பிடத்தக்கது.

விருத்தாசலம்: இங்ஙனம்
21-10-40. ஸாம்பமூர்த்தி சிவாசாரியர்

---

## ஸ்ரீ கார்த்திகேயன் கருணைக்கழகம்

செல்லாவருநெறிக்கே செல்ல அருள்புரியும் திருநணாவென்னும் பவானியாகிய அப் புண்ணியக்ஷேத்திரத்தில் ஸ்ரீ விசாலாக்ஷி சமேத விஸ்வநாதப்பெருமான் திருச்சன்னிதியில் அருளுக்கொண்டெழுந்தருளியிருக்கும் ஸ்ரீ தண்டபாணிமூர்த்தியின் திருவருட்டுணைகொண்டு சுமார் 1 3 24 முன் தொடங்கிப் பாடசாலை மாணவர்களாகியவர்கள் "கார்த்திகேயன் கருணைக்கழகம்" என்னும் திருநாமத்துடன் ஓர் சபை ஸ்தாபனஞ் செய்து, ஷையார்களுக்குள் நபர் 1-க்கு 0-4-0 வீதம் சந்தா வசூலித்து ஒவ்வொரு மாதக் கிருத்திகாநக்ஷத்திரங்கள்தோறும் ஸ்ரீ முருகப்பெருமானுக்கு இயன்றவண்ணம் அபிஷேக ஆராதனைகளும், உத்ஸவங்களும் உபந்நியாசங்களும் நடத்திக்கொண்டுவந்து, சில மெம்பர்கள் முயற்சிக் குறைவால் 15 ஆண்டுகளாக நிறுத்தப்பட்டு, விக்கிரம ஆண்டு சித்திரைத் திங்கள்முதற் புத்துயிர்பெற்றெழுந்து, சுமார் 60 மெம்பர்கள்கூடிப் பழைய படியே நடப்பதெனத் தீர்மானிக்கப்பெற்று, இவ்வாண்டிற்குத் தலைவர் B. K. நல்லசாமிசெட்டியாரையும், உபதலைவர் T. S. A R ஆர்த்த நாரிசெட்டியாரையும், காரியஸ்தர் B S நாகரத்தினத்தையும், சர்வாதிகாரர் ஸ்தலம் B. S ராஜலிங்கசிவாச்சாரியாரையும் நியமிக்கப்பெற்று, சித்திரைத்திங்கள் 26-ம் நாள் கார்த்திகையன்று ஸ்ரீ கார்த்திகேயனையே தலைவராகக்கொண்டு "ஈஸ்வர வழிபாடு" என்பதைப்பற்றி உபந்நியாசம் செய்யப்பெற்றது.

(2) வைகாசித்திங்கள் 22-ம் நாள் கிருத்திகையன்று B. S. ராஜலிங்கசிவாச்சாரியார் தலைமையில் B. K. கூளையஞ்செட்டியார் "அன்பும் அதன் பயனும்" என்பதைப்பற்றி உபந்நியாசித்தார்.

(3) ஆனித்திங்கள் 18-ம் நாள் கிருத்திகையன்று B. S. நடேசக் குருக்கள் தலைமையில் S. S. M. பழனிச்சாமிசெட்டியார் "வேதாந்தமும் சித்தாந்தமும்" என்பதைப்பற்றி உபந்நியாசித்தார்.

(4) ஆடிக்கிருத்திகையன்று B. K. நல்லசுவாமி தலைமையில் K. சம்பந்தம்பிள்ளை "மெய்யுணர்வு" என்பதைப்பற்றிச் சொற்பொழிவு நிகழ்த்தினர்.

(5) ஆவணித்திங்கள் 10-ம் நாள் கார்த்திகையன்று B. G. சுப்பிரமணியக்குருக்கள் தலைமையில் S. K. செங்கோடமுதலியார் "அடியார் பெருமை" என்பதைப்பற்றிச் சொற்பொழிவு நிகழ்த்தினர்.

(6) புரட்டாதிக் கார்த்திகையன்று S. S. M. பழனிச்சாமி செட்டியார் தலைமையில் வித்துவான் முத்துஸ்ரீரங்கம் "களவும் கற்று மற" என்பதுபற்றிச் சொற்பொழிவு நிகழ்த்தினர்.

(7) ஐப்பசித்திங்கள் 3-ம் நாள் ஸ்திரவாரம் மாலை 7 மணிக்கு S. பொன்னுச்சாமி தலைமையில் உக்கிராணம் திரு. கண்ணப்பர் "திருப்புகழ் அமிருதம்" என்பதுபற்றிச் சொற்பொழிவு நிகழ்த்தினர். இவ்வாறு மாதந்தோறும் இனிது நடைபெற்றும், சபை இடையே இன்னிசைக் கருவிகளைத் துணையாகக் கொண்டு ஆதிசைவச் சிறுவர் தத்தாத்திரிக்குருக்களும் தேவாரம் திரு. கண்ணப்பனும் தமிழ்மறை ஓதப்பெற்று, முருகப்பிரான் திருவருளுக்குப் பாத்திராகும் வண்ணமும் திருவருளைச் சதா சிந்திக்கின்றேம். ஷை கழகமானது திருப்பாதிரிப்புலியூர் ஸ்ரீலஸ்ரீ ஞானியார்ஸ்வாமிகள் முன்னிலையிலும், பவானி தமிழ்ப்பண்டிதர் கு. குமாரசுவாமிப்பிள்ளை அவர்கள் பெரும் முயற்சியாலும் தொடங்கப்பெற்றது. ஸ்ரீ முருகப்பிரான் திருவடிக்கண் முறுகி வளரும் மெய்யன்பர்கள் இனி யாதொரு இடையூறின்றி இனிது நடாத்திவரவேண்டுமாகக் குமரனைப் பிரார்த்திக்கின்றேன். குகாய நம:

ஷை கழக உறவின உயிர்த்தோழர்,
தி. நா. அர்த்தநாரீஸ்வரசிவம்.

---

## ஸ்ரீ கார்த்திகேயன் கருணைக்கழகத்தார்களுக்கு ஓர் சிறு விண்ணப்பம்

குகநேயச்செல்வர்காள்,

தங்கள் கழகமானது நீடூழிகாலம் பாலாரிஷ்டமின்றி நன்கு நடைபெற ஸ்ரீ நாகாசல வேலவனது சீர்பாதகமலங்களை அனவாதமும்

சிந்திக்கின்றேன். தவிரவும், ஷை கழகம் மறுமுறை ஆரம்பித்த விக்கிரமஆண்டு சித்திரைத்திங்கள் கார்த்திகைநாள் ஷை கழகத்திற்குத் தலைமைபூண்ட கருணையே உருவெடுத்த ஸ்ரீ கார்த்திகேயனையே ஒவ்வொரு திங்கள்தோறும் தலைமைகொண்டு கழகத்தைச் சீரும் சிறப்புமாகக் கொண்டாடவேண்டுமென்று நம்புகின்றேன். (முருகன் துணை)

நேரிற் கண்குளிரக் கண்ட
தி. நா. பண்டித ஸ்ரீ அர்த்தநாரீஸ்வரன்,
திருச்செங்கோடு.

---

## திருச்செந்தூர் ஆலாலசுந்தரர் பாலியசங்கம்

இச் சங்கத்தின் ஆண்டுநிறைவு விழாவானது 31-8-40 சனிக்கிழமையன்று பழனி ஸ்ரீலஸ்ரீ காசிவாசி ஈசானசிவாசார்ய சுவாமிகள் அவர்கள் தலைமையில் மித விமரிசையாயுஞ் சிறப்பாயும் நடைபெற்றது.

அதுசமயம் தூத்துக்குடி திருவாளர் சிவகுருநாதம்பிள்ளையவர்கள், நாகர்கோயில் திருவாளர் ஆறுமுகம்பிள்ளையவர்கள், புவனகிரி திருவாளர் இரத்தினவேலுமுதலியார் அவர்கள், திருச்செந்தூர் தேவஸ்தான இன்ஸ்பெக்டர் முத்துக்குமாரசுவாமிப்பிள்ளையவர்கள் மற்றும் பல அன்பர்கள் இச் சங்கத்தின் முன்னேற்றமான விஷயங்களைப்பற்றியும் இச் சங்கத்தின் ஆதரவில் ஓர் வாசகசாலை ஒன்று ஏற்படுத்தி நடத்திவரவேண்டுவது மிகவும் அவசியமானது என்பதுபற்றியும் இச் சங்கத்தில் ஆதிசைவப்பிரமுகர்களும் மற்றும் சைவப்பிரமுகர்களும் ஒத்துழைத்துச் சங்கம் மென்மேலும் விருத்தியடையம் முயற்சியைச் செய்யவேண்டியது ஒவ்வொருவர் கடமை என்பதுபற்றியும் வெகுவாகப் பல மேற்கோள்களுடன் எடுத்துக்காட்டியும் சிறந்த சொற்பொழிவுகள் செய்து யாவரையும் ஆனந்தக்கடலுள் மூழ்கிக் களிக்கும்படி செய்தார்கள்.

பின்னர் தலைவரவர்கள் சொற்பொழிவுகள் ஒப்புயர்வற்ற முறையில் நடைபெற்றது.

சங்கத்தார் வந்தனோபசாரத்துடன் கூட்டம் இனிது முடிவுற்றது.

இவ்வாண்டிற்கு ஷையூர் ஸ்ரீ கி. ராமசுவாமிபட்டர் அவர்கள் ஷை சங்கத்திற்குத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

இங்ஙனம்
மு. முத்தையாபட்டர்,
ஷை சங்கக் காரியதரிசி,
31-8-40. வடக்கு மாசிவீதி, திருச்செந்தூர்.

---